OL/2016/33/T-I (NEW)



නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

33 T I

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2016

ඉතිහාසය I
வரலாறு I
History I

පැය එකයි
ஒரு மணித்தியாலம்
One hour

**கவனிக்க:**

(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக. இவ் வினாத்தாளுக்கு **80** புள்ளிகள் வழங்கப்படும்.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை உரிய வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

**1.** 'வம்சத்தப்பகாசினி' என்பது எந்த வரலாற்று நூலுக்கு எழுதப்பட்ட உரைநூல் (டீகாவ) ஆகும் ?
(1) தீபவம்சம் (2) மகாவம்சத்தின் முதலாம் பாகம்
(3) தூபவம்சம் (4) போதிவம்சம்

**2.** புராதன காலத்தின் இலக்கிய, சமயத் தகவல்கள், வம்சக் கதைகள் என்பன எழுதப்பட்டிருப்பது,
(1) ஓலைகளிலான ஏட்டுச்சுவடிகளில் (2) கற்பலகைகளில்
(3) கற்குகை நீர்வடி விளிம்புகளில் (4) தங்க, செப்பேடுகளில்

**3.** தனது அனுபவத்திலிருந்து கண்டி இராச்சியம் தொடர்பான தகவல்களைக் கொண்ட நூலொன்றை எழுதியவர்
(1) பல்டியஸ் (2) ரிபெய்ரோ
(3) றொபட் நொக்ஸ் (4) குவேரோஸ் அடிகளார்

**4.** பௌர்ணமி தினங்களில் வியாபாரத்தில் ஈடுபட்டவர்களுக்குத் தண்டப்பணம் அறவிட்டமை பற்றிய தகவல்கள் கிடைக்கப்பெறும் மூலாதாரம் மேல்வருவனவற்றுள் எது ?
(1) மிகிந்தலை துண்டுக் கல்வெட்டு (2) வேவல்கெட்டிய கல்வெட்டு
(3) கற்புத்தகக் கல்வெட்டு (4) சொரபொரவாவியின் தூண் கல்வெட்டு

**5.** பிரஜை ஒருவராக வரலாற்று அறிவை மிக வினைத்திறனாகப் பயன்படுத்த வேண்டியது,
(1) இலங்கையின் கடந்தகால சிறப்பைக் கற்பதற்காக
(2) பழமையான தொழினுட்ப அறிவை நவீனமயப்படுத்திப் பயன்படுத்துவதற்காக
(3) கடந்த காலங்களில் செய்யப்பட்ட தவறுகளை மீண்டும் செய்யாதிருப்பதற்காக
(4) கடந்த காலத்தைக் கொண்டு நிகழ்காலத்தை விளங்கிக் கொண்டு எதிர்காலத்தை வடிவமைத்துக் கொள்வதற்காக

**6.** இலங்கையின் தேசிய மரபுரீதியான தொல்பொருட்களை மேல்வருவனவற்றுள் எந்தக் காரணத்திற்காகப் பாதுகாக்க வேண்டும் ?
(1) எதிர்கால சந்ததியினருக்குக் காட்ட வேண்டுமென்பதனால்
(2) இலங்கையின் தனித்துவத்தை எடுத்துக்காட்டக் காரணமாக அமைந்துள்ளதனால்
(3) சுற்றுலாத் துறையின் முன்னேற்றத்திற்குக் காரணமாக அமைவதனால்
(4) கடந்தகால ஆட்சியாளர்களின் செயற்பாடுகள் பற்றிய விளக்கத்தைப் பெற்றுக்கொள்ள முடியும் என்பதனால்

**7.** வரலாற்றுக்கு முற்பட்ட காலத்துக்குரிய கற்சாதனங்கள் கிடைக்கப் பெற்றுள்ள பத்திராஜவலை பிரதேசத்தின் இரணைமடு படிவுக்குரிய கற்காலச் சரளைக்கற்படிவு, கால அளவீட்டிற்கமைய
(1) ஒரு இலட்சத்து இருபத்தையாயிரம் ஆண்டுகள் பழமையானதாகும்.
(2) எண்பதாயிரம் ஆண்டுகள் பழமையானதாகும்.
(3) முப்பத்தெண்ணாயிரம் ஆண்டுகள் பழமையானதாகும்.
(4) இருபத்தெண்ணாயிரம் ஆண்டுகள் பழமையானதாகும்.

**8.** இலங்கையில் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த மனிதனின் வாழ்க்கை முறை பற்றிய தகவல்களைப் பெற்றுக்கொள்ள உதவும் பெரும்பாலான சான்றுகள் கிடைக்கப்பெற்ற இடமாகக் கருதப்படுவது,
(1) நிற்றிகல (2) கந்தரோடை (கதுருகொட)
(3) பாகியன்கல (4) கதிர்காமம்

[பக். 2 ஐப் பார்க்க

9. இலங்கையின் இரும்பு பயன்பாடு தொடர்பான தெளிவான தொல்பொருளியற் சான்றுகள் முதன்முதலில் கிடைக்கப் பெற்றது,
(1) வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலாகும். (2) முன் வரலாற்றுக் காலத்திலாகும்.
(3) ஆரம்ப வரலாற்றுக் காலத்திலாகும். (4) வரலாற்றுக் காலத்திலாகும்.

10. வேட்டையாடுதலின் மூலம் வாழ்ந்த வரலாற்றுக்கு முற்பட்ட மனிதன், விவசாயத்தில் ஈடுபடுவதற்குக் காரணமாக அமைந்த அடிப்படை சுற்றாடற் காரணி மேல்வருவனவற்றுள் யாது ?
(1) மண்ணின் வளமான தன்மை அதிகரித்தமை
(2) வேட்டையாடுதலுக்குப் பொருத்தமான விலங்குகளின் தட்டுப்பாடு
(3) குளிர்க் காலநிலை மாற்றமுற்று வெப்பக் காலநிலை ஆரம்பித்தமை
(4) மக்கள் தொகை அதிகரிப்பும் பரவலும்

11. ஆரம்ப வரலாற்றுக் காலத்தில் இலங்கையில் குடியிருப்புகளின் பரவல் தொடர்பானதொரு விளக்கத்தைப் பெற்றுக் கொள்வதற்கு முக்கியமானதாய் அமையும் காரணி மேல்வருவனவற்றுள் எது ?
(1) கிராமியக் குளங்களின் விஸ்தரிப்பு (2) குகைகளின் அமைவு
(3) செங்கபில மண்ணின் பரவல் (4) சமதரைகளின் விஸ்தரிப்பு

12. பருமகர்களுக்கு அரசாங்கத்தில் உயர் பதவிகளை வழங்கி அரசியல் அதிகாரத்தை மையப்படுத்தும் செயன்முறையைத் தொடக்கிய அரசன்
(1) பண்டுகாபயன் (2) தேவநம்பியதீசன் (3) துட்டகைமுனு (4) வசபன்

13. புராதன இலங்கையில் முன்னேற்றகரமான மருத்துவத் தொழினுட்பம் காணப்பட்டமைக்கான முக்கிய சான்றாக அமைவது
(1) பழமையான வைத்திய நூல்கள் இலங்கையில் பயன்பாட்டிலுள்ளமை
(2) தொல்பொருள் ஆய்வுகளில் சத்திரசிகிச்சையுடன் தொடர்புடைய உபகரணங்கள் கண்டெடுக்கப்பட்டமை
(3) மருத்துவர்களாகப் பிரபல்யமடைந்த அரசர்கள் தொடர்பாக வரலாற்று நூல்களிற் குறிப்பிடப்பட்டிருக்கின்றமை
(4) கடந்தகால வைத்தியசாலைக் கட்டடங்களின் இடிபாடுகள் கிடைக்கப் பெற்றமை

14. பல இடங்களில் அணைக்கட்டுகளை அமைத்து நீண்ட தூரத்துக்குக் கால்வாய் மூலமாக நீரைக் கொண்டு செல்வதற்காகப் பயன்படுத்தப்பட்ட நதி மேல்வருவனவற்றுள் எது ?
(1) மல்வத்து ஓயா (2) கலா ஓயா (3) யான் ஓயா (4) மகாவலி கங்கை

15. இலங்கையை மூன்று முறை ஆட்சிசெய்ததாக வரலாற்றிலே குறிப்பிடப்பட்டுள்ள அரசி மேல்வருவோருள் யார் ?
(1) லீலாவதி (2) கல்யாணவதி (3) சுகலா (4) சூலசீவலி

16. கீர்த்தி ஸ்ரீ நிசங்கமல்ல மன்னன் தனது பல்வேறு கல்வெட்டுகளிற் பயன்படுத்திய அரச கோட்பாடு தொடர்பான எண்ணக்கரு மேல்வருவனவற்றுள் எது ?
(1) தேவ எண்ணக்கரு (2) போதிசத்துவ எண்ணக்கரு
(3) பர்வதராஜ எண்ணக்கரு (4) சக்கரவர்த்தி எண்ணக்கரு

17. பழங்காலத்தில் 'கவு' எனும் அளவீட்டுமுறை பயன்படுத்தப்பட்டது
(1) காலத்தை அளப்பதற்கு (2) தூரத்தை அளப்பதற்கு
(3) நிறையை அளப்பதற்கு (4) பரப்பை அளப்பதற்கு

18. கல்வெட்டு மூலாதாரங்களில் 'தகபதி' எனக் குறிப்பிடப்படுவது
(1) நீர் வரியாகும். (2) தானிய வரியாகும். (3) மீன் வரியாகும். (4) துறைமுக வரியாகும்.

19. மேல்வரும் கூற்றுகளைக் கருதுக.
- நகராக்கத் திட்ட வரைபடங்கள் கேத்திரகணிதப் பொறிமுறைத் தன்மையிலிருந்து மீண்டு சுதந்திரத் தன்மைக்கு மாற்றமுறல்
- நகரங்கள் அளவில் மிகப் பெரிதானதாகக் காட்டப்படாமை

மேற்படி கூற்றுகளுடன் தொடர்புடைய நகரங்களின் சோடி இவற்றுள் எது ?
(1) அனுராதபுரமும் பொலன்னறுவையும் (2) அனுராதபுரமும் தம்பதெனியாவும்
(3) தம்பதெனியாவும் யாப்பகூவவும் (4) பொலன்னறுவையும் குருணாகலையும்

20. மேல்வரும் வரலாற்று நிகழ்வுகளைக் கருதுக.
A – ஐந்நூற்று ஐம்பது ஜாதகக் கதை நூல் சிங்களத்துக்கு மொழிபெயர்ப்புச் செய்யப்பட்டமை
B – கண்டிய பிரதேச ஆட்சியாளனான 'ஜோதிய' என்பவன் கிளர்ச்சியை ஏற்படுத்தியமை
C – சந்திரபானு இலங்கை மீது படையெடுத்தமை
D – இபுன் பதூதா என்ற அராபியப் பிரயாணி இலங்கைக்கு வருகை தந்தமை

மேற்குறித்த வரலாற்று நிகழ்வுகளை அவை இடம்பெற்ற கால ஒழுங்கில் கொண்டுள்ள சரியான விடை யாது ?
(1) A, C, B, D (2) C, A, D, B (3) C, D, A, B (4) D, C, A, B




Department of Examinations, Sri Lanka.

**21.** கண்டி இராசதானி தொடர்பான மேல்வரும் கூற்றுகளுள் **பிழையான** கூற்றைத் தெரிவுசெய்க.
(1) நாட்டின் உயர் ஆட்சியதிகாரமும் நீதித்துறை அதிகாரமும் அரசனிடம் காணப்பட்டது.
(2) மரபுகள், முன்னைய பழக்கவழக்கங்களுக்கமைய ஆட்சி நடவடிக்கைகள் இடம்பெற்றன.
(3) சமூகத் தொடர்புகளும் திருமணங்களும் சாதிமுறையினடிப்படையில் இடம்பெற்றன.
(4) நாட்டின் அனைத்து பிரஜைகளும் சட்டத்தின் முன் சமமானவர்களாகக் கருதப்பட்டனர்.

**22.** போர்த்துக்கேயர் இலங்கைக்கு வந்த காலப்பகுதியில் யாழ்ப்பாணத்தை ஆட்சி செய்தவர் யார் ?
(1) சங்கிலியன் (2) பரராஜசேகரம் (3) புவிராஜபண்டாரம் (4) எதிரிமன்னசிங்கம்

• மேல்வரும் அட்டவணையில் A தொடக்கம் J வரையில் தரப்பட்டுள்ள தகவல்களை அடிப்படையாகக் கொண்டு **23** ஆம், **24** ஆம் வினாக்களுக்கு விடையளிக்குக.

| அரசன் | இடம் | இராணுவ அதிகாரி |
|---|---|---|
| A - முதலாம் விமலதர்மசூரியன் | D - ரந்தெனிவலை | G - தியோகு த மேலோ |
| B - முதலாம் இராஜசிங்கன் | E - தந்துரே | H - கொன்ஸ்தாந்தினு த சா |
| C - இரண்டாம் இராஜசிங்கன் | F - முல்லேரியா | J - பேரோ லோபேஸ் த சூசா |

**23.** ரந்தெனிவலைப் போருடன் தொடர்புடைய கண்டிய அரசனும் போர்த்துக்கேய இராணுவ அதிகாரியும் குறிப்பிடப்பட்டுள்ள விடை எது ?
(1) A, G (2) B, H (3) C, H (4) C, J

**24.** முதலாம் விமலதர்மசூரியன் போர்த்துக்கேயருடன் போரிட்ட இடத்தையும் அதன்போது போர்த்துக்கேய இராணுவத்தை வழிநடத்திய இராணுவ அதிகாரியையும் குறிப்பிடும் விடை எது ?
(1) D, G (2) E, H (3) E, J (4) F, G

**25.** அரசனுக்கு மகன்மார் இல்லாதபோது அரசியின் சகோதரனுக்கு அரசுரிமையை வழங்கும் மரபினைக் கடைப்பிடித்தோர் மேல்வரும் எப்பரம்பரையைச் சேர்ந்த ஆட்சியாளர்களாவர் ?
(1) மௌரியர் (2) இலம்பகர்ணர் (3) காலிங்கர் (4) நாயக்கர்

**26.** ஒல்லாந்தர் கண்டிய அரசர்களுடனான செயற்பாடுகளின்போது பெரும்பாலும் மோதல்களை ஏற்படுத்திக் கொள்வதனைத் தவிர்த்துக்கொண்டமைக்குப் பிரதான காரணம் மேல்வருவனவற்றுள் எது ?
(1) கண்டிய அரசர்களைப் பகைத்துக் கொள்வது தமது வர்த்தக நடவடிக்கைகளுக்குத் தடையாக அமையலாம் என்பது
(2) கண்டிய மன்னர்களின் போர்ப் பலத்துடன் ஒப்பிடுகையில் ஒல்லாந்தர்களின் இராணுவ பலம் பலவீனமானதாகக் காணப்பட்டமை
(3) செலவுகளைக் குறைத்துக் கொள்ளல் ஒல்லாந்தர்களின் கொள்கைகளின் அடிப்படைப் பண்பாகக் காணப்பட்டமை
(4) கண்டிக்கு இராணுவத்தை அனுப்பும்போது பல்வேறு இடர்பாடுகளுக்கு முகங்கொடுக்க வேண்டியேற்பட்டமை

• கீழே A தொடக்கம் E வரையில் தரப்பட்டுள்ள தகவல்களை அடிப்படையாகக் கொண்டு **27** ஆம், **28** ஆம் வினாக்களுக்கு விடையளிக்குக.

A – சர்வஜன வாக்குரிமை
B – தேசிய அரசுக் கழகம்
C – பொதுசன வாக்கெடுப்பு
D – செனட் சபை
E – விகிதாசார பிரதிநிதித்துவ முறை

**27.** டொனமூர் அரசியல் யாப்புச் சீர்திருத்தம், சோல்பரி அரசியல் யாப்புச் சீர்திருத்தம் ஆகியவற்றுடன் தொடர்புடைய தகவல்களை ஒழுங்குமுறையில் உள்ளடக்கிய விடை யாது ?
(1) A, B (2) A, D (3) B, D (4) C, E

**28.** 1978 அரசியல் யாப்பில் அடங்கியுள்ள விடயங்களை உள்ளடக்கிய விடை யாது ?
(1) B, C (2) B, D (3) C, D (4) C, E

**29.** ஆங்கிலேயர்கள் கண்டியைக் கைப்பற்றுவதற்காக தந்திரோபாயமாகச் செயற்பட்டதன் மூலம் பங்களிப்பு வழங்கியதாகக் கருதப்படுபவர்
(1) மேஜர் ஹூக் (2) எஹெலபொல அதிகாரம்
(3) ஜோன் டொய்லி (4) றொபட் பிரவுண்றிக்

**30.** இலங்கையில் தோற்றம் பெற்ற பழமையான அரசியற் கட்சி
(1) லங்கா சமசமாஜக் கட்சி (2) ஐக்கிய தேசிய கட்சி
(3) இலங்கை கம்யூனிஸ்ற் கட்சி (4) ஸ்ரீ லங்கா சுதந்திரக் கட்சி



[பக். 4 ஐப் பார்க்க

**31.** இலங்கையில் அமைந்துள்ள சில விவசாயக் குடியேற்றங்கள் கீழே தரப்பட்டுள்ளன.

A – கல்லோயா B – மின்னேரியா
C – கந்தளாய் D – மினிப்பே
E – கிரிதலே

மேற்குறித்த விவசாயக் குடியேற்றங்களுள் இலங்கைக்குச் சுதந்திரம் கிடைப்பதற்கு முன்னர் ஆரம்பிக்கப்பட்டவற்றைக் குறிப்பிடும் விடை எது ?

(1) A, E (2) B, C (3) B, D (4) C, D

**32.** ஹென்ரி ஸ்டீல் ஒல்கொற், அணகாரிக தர்மபால, ஆறுமுகநாவலர், சித்திலெப்பை ஆகியோரின் செயற்பாடுகளின் பொதுப் பண்பு

(1) சமய, கல்வி மறுமலர்ச்சிக்குத் தலைமை தாங்கியமை
(2) இலங்கையின் கடந்தகாலச் சிறப்புகளை உலகிற்கு எடுத்துக்காட்டியமை
(3) மதுவிலக்கு இயக்கத்துக்குத் தலைமை தாங்கியமை
(4) அரசியலமைப்புச் சீர்திருத்தங்களைக் கோரி போராட்டங்களை நடத்தியமை

**33.** மத்திய காலத்தில் ஐரோப்பாவில் ஏற்பட்ட மறுமலர்ச்சி காரணமாக பல்வேறு துறைகளில் பல மாற்றங்கள் ஏற்பட்டன. மேல்வருவனவற்றுள் எத்துறையில் லியனாடோ டாவின்சி பிரசித்தி பெற்றார் ?

(1) மருத்துவ விஞ்ஞானம் (2) ஓவியக் கலை (3) நாடுகாண் பயணங்கள் (4) இலக்கியம்

**34.** பல்வேறு கண்டுபிடிப்புகளைச் செய்த சிலரின் பெயர்கள் கீழே தரப்பட்டுள்ளன.

A - சாமுவேல் மோர்ஸ்
B - றொபட் புல்டன்
C - ஹம்ப்ரி டேவி
D - குக்லி மார்க்கோனி
E - ஜோன் மெக்கடம்

மேலே பெயர் குறிப்பிடப்பட்டுள்ளவர்களுள் கைத்தொழிற் புரட்சியின்போது தொடர்பாடல் துறையுடன் தொடர்புடைய கண்டுபிடிப்புகளைச் செய்தோரைக் காட்டும் விடை

(1) A, C (2) A, D (3) B, E (4) C, E

**35.** கைத்தொழிற் புரட்சியின் காரணமாக முன்னேற்றமடைந்த சமூக விளைவைக் காட்டும் விடையைத் தெரிவுசெய்க.

(1) பொருட்களையும் சேவைகளையும் இலாபகரமாகவும் விரைவாகவும் அதிக அளவிலும் வழங்க முடிந்தமை
(2) பல்தேசிய வணிகங்கள் முன்னேற்றமடையத் தொடங்கியமை
(3) நகரமயமாக்கலின் முன்னேற்றம் விரைவுபடுத்தப்பட்டமை
(4) நிதி, வங்கிச் சேவைகள் பரவலடையத் தொடங்கியமை

- கீழே A, B, C, D ஆகியவற்றினால் தரப்பட்டுள்ள விடயங்களைக் கவனத்திற் கொண்டு **36** தொடக்கம் **38** வரையுள்ள வினாக்களுக்கு விடையளிக்குக.

A – 1. போர் முரண்பாடுகள்
2. சூழல் மாசடைதல்

B – 1. நாசிசவாதம்
2. ஹிட்லர்

C – 1. மார்ஷல் திட்டம்
2. ஐக்கிய அமெரிக்கக் குடியரசு

D – 1. முதலாம் உலக மகாயுத்தம்
2. ஐக்கிய நாடுகள் சபை

**36.** முதலாவதன் விருத்தி இரண்டாவதின் அதிகரிப்புக்குக் காரணமானதெனக் காட்டும் விடயச்சோடி யாது ?

(1) A (2) B (3) C (4) D

**37.** முதலாவதன் விருத்தியுடன் இரண்டாவது பலமடைவதனைக் காட்டும் விடயச்சோடி எது ?

(1) A (2) B (3) C (4) D

**38.** முதலாவதற்கும் இரண்டாவதற்கும் இடையில் எதுவித தொடர்பையும் **காட்டாத** விடயச்சோடி எது ?

(1) A (2) B (3) C (4) D

**39.** இரண்டாம் உலக மகாயுத்தக் காலத்தில் கொழும்பு, திருகோணமலை ஆகிய நகரங்களின் மீது விமானத் தாக்குதல் நடத்திய நாடு எது ?

(1) ஐக்கிய அமெரிக்கக் குடியரசு (2) ஜேர்மனி
(3) ஜப்பான் (4) இத்தாலி

**40.** கூட்டுச்சேரா (அணிசேரா) நாடுகளின் அமைப்பு நிறுவப்படுவதற்குத் தலைமையேற்றுச் செயற்பட்ட தெற்காசிய அரச தலைவர் மேல்வருவோருள் யார் ?

(1) மார்ஷல் டிட்டோ (2) ஜவஹர்லால் நேரு (3) அப்துல் கமால் நசார் (4) லீ குவாங் யு

***

77760

OL/2016/33/T-II (NEW)



නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

33 T II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2016

ඉතිහාසය II
வரலாறு II
History II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

* பகுதி **I** இன் **முதலாம்** வினா கட்டாயமானது.
* பகுதி **II** இலிருந்து **நான்கு** வினாக்களுக்கும் பகுதி **III** இலிருந்து **ஒரு** வினாவுக்கும் விடை எழுதுக.
* எல்லாமாக **ஆறு** வினாக்களுக்கு விடை எழுதுக.

## பகுதி I

**1.** (அ) கீழே (i) இல் குறிப்பிடப்பட்டுள்ள **எல்லா** வரலாற்று இடங்களையும் தரப்பட்டுள்ள இலங்கைப் படத்திலும் (ii) இல் குறிப்பிடப்பட்டுள்ள **எல்லா** வரலாற்று இடங்களையும் தரப்பட்டுள்ள உலகப் படத்திலும் குறித்துப் பெயரிடுக.

(i) தெதுறு ஓயா, கல் ஓயா, இலங்கைத்துறை, சிலாபம், கதிர்காமம், செங்கடகல, பூந்தல, இப்பன்கட்டுவ, யோத வாவி, நல்லூர், கலாவாவி, ஊராத்தோட்டை (12 புள்ளிகள்)

(ii) சென்னை (மதராஸ்), பாரசீக விரிகுடா, ஜாவா தீவு, இத்தாலி, கெலிகட், கொன்ஸ்தாந்திநோபிள் (06 புள்ளிகள்)

(ஆ) (i) மேல்வரும் *A, B, C, D* ஆகிய வரலாற்றுத் தகவல்களுடன் தொடர்புடைய நபர்களை ஒழுங்குமுறையில் உங்கள் விடைத்தாளில் எழுதுக.

*A* - இந்தியாவிற் கரையிறங்கி, தான் ஒரு கிறிஸ்தவன் என்றும் வாசனைத்திரவியங்களைத் தேடி வந்ததாகவும் குறிப்பிட்டவர்

*B* - 'திலோக சுந்தரி' என்ற காலிங்க மன்னனின் மகளை மணம்முடித்த பொலன்னறுவையின் அரசன்

*C* - இலங்கையை ஆட்சிசெய்த முதலாவது இலம்பகர்ண அரசன்

*D* - இரண்டாம் உலக மகாயுத்தத்துடன் தொடர்புடைய இத்தாலிய பாசிச ஆட்சியாளர்

(04 புள்ளிகள்)

- *A, B* ஆகியவற்றினால் காட்டப்பட்டுள்ள படங்களை அவதானித்து, கேட்கப்பட்டுள்ள வினாக்களுக்கான விடைகளை வினா இலக்கங்களின் ஒழுங்கில் உங்கள் விடைத்தாளில் எழுதுக.

(ii) 1. '*A*' இனால் காட்டப்பட்டுள்ள நிர்மாணிப்பின் பெயர் என்ன ?
2. எந்தத் தூபியில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாராய்ச்சியினால் இது கண்டுபிடிக்கப்பட்டது ?
3. இது எந்த உலோகத்தினால் உருவாக்கப்பட்டுள்ளது ?
4. இந்த தொல்பொருள் கண்டுபிடிக்கப்பட்ட இடத்திற் பிறந்ததாகக் கருதப்படும் மன்னனின் பெயர் என்ன ?

(04 புள்ளிகள்)



*A*

(iii) 1. '*B*' இனால் காட்டப்பட்டுள்ள கட்டடத்தின் பெயர் என்ன ?
2. இது எந்த சமயத்திற்குரியது ?
3. இது இலங்கையின் எவ்வரலாற்று நகரத்தில் அமைந்துள்ளது ?
4. இது இலங்கையை ஆண்ட எந்த வெளிநாட்டு ஆட்சியாளர்களினால் நிர்மாணிக்கப்பட்டது ?

(04 புள்ளிகள்)



*B*

[பக். 2 ஐப் பார்க்க

## பகுதி II

**2.** (i) இலங்கையின் வரலாற்றுக்கு முற்பட்ட காலப்பகுதிக்குரிய மனிதன் வாழ்ந்த சூழலியல் வலயங்கள் **மூன்றினைப்** பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) வரலாற்றுக்கு முற்பட்ட மனிதன் வாழ்ந்ததாகக் கருதப்படுகின்ற கரையோரத்து திறந்த வாழ்விடங்கள் காணப்பட்ட **இரண்டு** இடங்களையும் கற்குகை வாழ்விடங்கள் காணப்பட்ட இடங்கள் **இரண்டையும்** பெயரிடுக. (04 புள்ளிகள்)

(iii) வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த மனிதனின் உணவு முறைகள், அவர்கள் வாழ்ந்த பல்வேறு சூழல்களுக்கு அமைய வடிவமைக்கப்பட்டிருந்த விதத்தை **இரண்டு** உதாரணங்களின் துணையுடன் எடுத்துக்காட்டுக. (05 புள்ளிகள்)

(iv) ஆதி வரலாற்றுக் காலத்தில் வாழ்ந்த ஒருவர் இறந்த பின்னர் பின்பற்றப்பட்டிருக்கலாம் எனக் கருதப்படும் மரணச் சடங்கு முறைகளை **இரண்டு** காரணிகளின் துணையுடன் விளக்குக. (06 புள்ளிகள்)

**3.** (i) இலங்கையின் கல்வெட்டுகளிற் குறிப்பிடப்பட்டுள்ள தகவல்களுக்கமைய கீழே *A, B, C* ஆகியவற்றினால் காட்டப்பட்டுள்ள ஒவ்வொருவரினதும் பதவிப்பெயரை ஒழுங்குமுறையில் எழுதுக.

*A* - குடும்பத் தலைவர்
*B* - கிராமத் தலைவர்
*C* - சில கிராமங்களின் அல்லது குளக்கட்டமைப்பின் தலைவர் (03 புள்ளிகள்)

(ii) மத்திய அரசாங்கத்துடன் தொடர்புடைய மேல்வரும் பணிகளுக்குப் பொறுப்பானவர்களின் பதவிப்பெயர்களை அடைப்புக்குறிக்குள் இருந்து தெரிவுசெய்து *A, B, C, D* ஒழுங்குமுறையில் எழுதுக.

*A* - அமைச்சரவையின் தலைவராகப் பணியாற்றுதல்
*B* - அரச திறைசேரிக்குப் பொறுப்பாக இருத்தல்
*C* - நகர ஆட்சி தொடர்பில் பணியாற்றுதல்
*D* - அரசனின் யானைகள் தொடர்பில் பணியாற்றுதல்

(வெதனா, மஹாமத, படகரிக, சேனபதி, ஹதி அதெக, நகர குத்திக, அச அதெக, பதகு) (04 புள்ளிகள்)

(iii) நாட்டு மக்கள் அரசனிடமிருந்து எதிர்பார்த்த சேவைகள் **இரண்டினை** விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) வசப மன்னன் இந்நாட்டின் முக்கியமான ஆட்சியாளர்களுள் ஒருவர் என்பதை **மூன்று** காரணிகளின் துணையுடன் எடுத்துக்காட்டுக. (06 புள்ளிகள்)

**4.** (i) எலகர கால்வாயின் மூலம் நீர் விநியோகிக்கப்பெறுகின்ற **மூன்று** குளங்களைப் பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) கீழே *A* தொடக்கம் *D* வரையில் தரப்பட்டுள்ள ஒவ்வொரு கூற்றுடனும் தொடர்புடைய விடையை ஒழுங்குமுறையில் எழுதுக.

*A* - மகியங்கனைக்குத் தெற்கில் மகாவலி கங்கைக்குக் குறுக்காக அமைக்கப்பட்ட அணைக்கட்டு
*B* - கலா வாவியிலிருந்து திச வாவி வரை நீரைக் கொண்டு செல்வதற்காக நிர்மாணிக்கப்பட்ட கால்வாய்
*C* - "விண்ணிலிருந்து மண்ணில் பொழியும் ஒரு துளி நீரையேனும் மனிதனுக்குப் பயன்படாது கடலில் கலப்பதற்கு இடமளிக்கக் கூடாது" என்ற கருத்தைக் கொண்டிருந்த அரசன்
*D* - மழைநீரினால் போஷிக்கப்படுகின்ற சிறிய குளங்களின் கட்டமைப்புக்கு வழங்கப்படும் பெயர் (04 புள்ளிகள்)

(iii) (a) குளமொன்றின் முக்கியமான தொழினுட்பக் கூறுகள் **இரண்டைப்** பெயரிடுக.
(b) நீங்கள் மேலே (a) இல் பெயரிட்ட ஒரு தொழினுட்பக் கூறின் நிர்மாணிப்பு, பயன்பாடுகள் என்பன பற்றிச் சுருக்கமாக விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) பொலன்னறுவை இராச்சியத்தின் வீழ்ச்சிக்குப் பின்னர் பாரியளவிலான நீர்ப்பாசனத்திட்டங்கள் ஏன் தோன்றவில்லை என்பதனை **மூன்று** காரணிகளின் துணையுடன் விளக்குக. (06 புள்ளிகள்)

**5.** (i) மேல்வரும் *A, B, C* ஆகியவற்றினால் குறிப்பிடப்பட்டுள்ள பணிகளுடன் தொடர்புடைய ஆட்சியாளர்களை ஒழுங்குமுறையில் குறிப்பிடுக.

*A* - ஒரு நகரத்திற்குரிய அனைத்து கூறுகளையும் கொண்ட ஆட்சி நிலையமாக அனுராதபுரத்தை மாற்றியமை
*B* - சிகிரியாவை தனது ஆட்சி நிலையமாகத் தெரிவுசெய்தமை
*C* - இராசரட்டையை சோழரின் ஆட்சியிலிருந்து மீட்டு, ஆட்சி நிலையமாக பொலன்னறுவையைத் தெரிவுசெய்தமை (03 புள்ளிகள்)

(ii) *A* - வரலாற்று ரீதியான மாயரட்டைக்குரிய இரண்டாவது நகராக்க ஆட்சி நிலையங்கள் **இரண்டையும்**
*B* - வரலாற்று ரீதியான மலையரட்டைக்குரிய இரண்டாவது நகராக்க ஆட்சி நிலையங்கள் **இரண்டையும்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) இரண்டாவது நகராக்கக் காலத்தில் ஆட்சி நிலையங்களைத் தெரிவுசெய்வது தொடர்பில் செல்வாக்குச் செலுத்திய அடிப்படைக் காரணிகள் **இரண்டை** விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) ஆறாம் பராக்கிரமபாகு மன்னன் சிறந்த ஆட்சியாளனாகக் கருதப்படுவதற்கு ஏதுவான காரணிகள் **மூன்றினைக்** குறிப்பிட்டு, அவற்றைச் சுருக்கமாக விவரிக்குக. (06 புள்ளிகள்)

[பக். 3 ஐப் பார்க்க

6. (i) *A* - முதல் தடவையாக கண்டியில் சுதந்திரமான இராச்சியத்தை அமைத்த மன்னன்
*B* - கி.பி. 1580 இல் மலைநாட்டின் மீது படையெடுத்த சீதாவாக்கையின் ஆட்சியாளன்
*C* - தோனா கத்தரினா என்ற பெயரில் ஞானஸ்நானம் பெற்ற கரல்லியத்தே பண்டாரவின் மகள்
ஆகியோரின் பெயர்களை *A, B, C* ஒழுங்குமுறையில் எழுதுக. (03 புள்ளிகள்)

(ii) *A* - அரச மாளிகையின் பயன்பாட்டுக்காக ஒதுக்கப்பட்ட நிலம்
*B* - பௌத்த விகாரைகளின் பராமரிப்புக்காக வழங்கப்பட்ட நிலம்
*C* - பிரதானிகள் செய்த சேவைக்காக வழங்கப்பட்ட நிலம்
*D* - கோயில்களின் பராமரிப்புக்காக ஒதுக்கப்பட்ட நிலம்
ஆகியன என்ன பெயர்களால் அழைக்கப்பட்டன என்பதை *A, B, C, D* ஒழுங்குமுறையில் எழுதுக. (04 புள்ளிகள்)

(iii) முதலாம் விமலதர்மசூரிய மன்னன் கண்டி இராச்சியத்தில் தனது சட்டரீதியான உரிமையை உறுதிப்படுத்திக் கொள்வதற்காகப் பின்பற்றிய நடைமுறைகள் **இரண்டினைச்** சுருக்கமாக விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) போர்த்துக்கேயர், ஒல்லாந்தர் ஆகியோர் கண்டி இராச்சியத்தைக் கைப்பற்றுவதற்கு மேற்கொண்ட படையெடுப்புகள் தோல்வியடைந்தமையில் செல்வாக்குச் செலுத்திய காரணங்கள் **மூன்றினைச்** சுருக்கமாக விவரிக்குக. (06 புள்ளிகள்)

7. (i) பிரித்தானியர்களால் இந்தியாவில் அமைக்கப்பட்ட வர்த்தக நிலையங்கள் **மூன்றினைப்** பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) இலங்கை மீது பிரித்தானியர்கள் கவனம் செலுத்துவதற்கு ஏதுவாய் அமைந்த காரணங்கள் **இரண்டினைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) இலங்கையின் கரையோரப் பிரதேசங்களைக் கைப்பற்றிய பிரித்தானியருக்கு ஏன் மலையக இராச்சியத்தைக் கைப்பற்ற வேண்டிய தேவையேற்பட்டது என்பதனை **இரண்டு** காரணிகளை அடிப்படையாகக் கொண்டு சுருக்கமாக விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) கி.பி. 1818 இல் பிரித்தானியருக்கு எதிரான கலகம் ஏற்படுவதிற் செல்வாக்குச் செலுத்திய காரணங்கள் **மூன்றினைச்** சுருக்கமாக விளக்குக. (06 புள்ளிகள்)

## பகுதி III

8. (i) பிரெஞ்சுப் புரட்சியில் செல்வாக்குச் செலுத்திய கருத்துகளை முன்வைத்த தத்துவஞானிகள் **மூவரைப்** பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) மேல்வரும் *A, B, C, D* ஆகியவற்றினால் காட்டப்பட்டுள்ள ஒவ்வொரு தகவலுக்குமுரிய விடைகளை அடைப்புக்குறிக்குள்ளிலிருந்து தெரிவுசெய்து ஒழுங்குமுறையில் எழுதுக.
*A* - அமெரிக்கப் புரட்சி ஏற்படுவதற்கு அடிப்படையாக அமைந்த சம்பவம்
*B* - சுதந்திர ஐக்கிய அமெரிக்கக் குடியரசின் முதலாவது ஜனாதிபதி
*C* - பிரெஞ்சுப் புரட்சியின்போது அந்நாட்டின் ஆட்சியாளர்
*D* - ரஷ்யப் புரட்சிக்குத் தலைமைதாங்கியவர்
(வீ. ஐ. லெனின், பதினாறாம் லூயி, நெப்போலியன் போனபாட், பொஸ்டன் தேநீர் விருந்து, டெனிஸ் மைதான உறுதிமொழி, ஜோர்ஜ் வாஷிங்டன், ஆபிரகாம் லிங்கன், லியோன் ட்ரோட்ஸ்கி) (04 புள்ளிகள்)

(iii) பிரெஞ்சுப் புரட்சியின் பின்னர் அந்நாட்டில் ஏற்பட்ட மாற்றங்கள் **இரண்டினைச்** சுருக்கமாக விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) ரஷ்யப் புரட்சியினால் அந்நாட்டில் ஏற்பட்ட அரசியல், பொருளாதார மாற்றங்கள் ஒவ்வொன்றை உதாரணம் தந்து விவரிக்குக. (06 புள்ளிகள்)

9. (i) குடியேற்றங்களை அமைத்த ஐரோப்பிய நாடுகள் **மூன்றினைப்** பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) மேல்வரும் *A, B, C, D* ஆகியவற்றினால் குறிப்பிடப்படும் விபரங்களுடன் தொடர்புடையவர்களை அடைப்புக்குறிக்குள் இருந்து தெரிவுசெய்து ஒழுங்குமுறையில் குறிப்பிடுக.
*A* - சிறு இராச்சியங்கள் பலவற்றை ஒன்றிணைத்து ஜேர்மனி என்ற பெயரில் ஒரு நாட்டை உருவாக்கியவர்
*B* - காலனித்துவ ஆட்சியை ஏற்படுத்தும் கொள்கையைக் கடைப்பிடித்த ஜேர்மனியப் பேரரசர்
*C* - இரண்டாம் உலக மகாயுத்தத்தின்போது நட்பு நாடுகள் அணிக்குத் தலைமைதாங்கிய பிரித்தானியப் பிரதமர்
*D* - இரண்டாம் உலக மகாயுத்தத்தின் இறுதியில் எதுவித நிபந்தனைகளும் இன்றி அடிபணியும் ஒப்பந்தத்தில் கையொப்பமிட்ட ஜப்பானியப் பேரரசர்
(ஹிரோஹிதோ, முட்சுஹிதோ, வின்ஸ்ற்றன் சேர்ச்சில், லோய்ட் ஜோர்ஜ், இரண்டாம் வில்லியம் கைசர், ஒட்டோ வொன் பிஸ்மார்க், அடோல்ப் ஹிட்லர், ஜோசப் ஸ்டாலின்) (04 புள்ளிகள்)

(iii) உலக சமாதானத்தைப் பாதுகாப்பதற்காக ஐக்கிய நாடுகள் சபை பின்பற்றக்கூடிய நடவடிக்கைகள் **இரண்டினைச்** சுருக்கமாக விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) இரண்டாம் உலக மகாயுத்தத்தின் **மூன்று** விளைவுகளைச் சுருக்கமாக விவரிக்குக. (06 புள்ளிகள்)

* * *

77760

OL/2016/33-STE-II/(NEW)



නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

33 STE II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்
**General Certificate of Education (Ord. Level) Examination, December 2016**

**ඉතිහාසය II**
வரலாறு II
History II

1. (අ) (i)
1. (அ) (i)
1. (a) (i)

විභාග අංකය
சுட்டெண்
Index No. ..............................



1. (ඇ) (ii)
1. (அ) (ii)
1. (a) (ii)

